# புதிய ஓர் உலகம் செய்வோம்



# புதிய ஓர்
# உலகு செய்வோம்

த. கோவேந்தன்

கிடைக்குமிடம்

இளங்கோ பதிப்பகம்
உசுமான் சாலை,
சென்னை-17.

# முன்னுரை

உலகம் உருப்பட உள்ள ஒரே வழி பொதுமை அறம்தான். அதனைச் செயற்படுத்த முனைவதே பொதுவுடைமைக் கொள்கை. உலகத்தின் ஒரு பங்கான தமிழகமும் இந்தியாவும் இதனைப் போற்றிச் செயல்படுத்துவதே அறிவுடைமை யாகும்.

எந்த ஒரு புதிய வாழ்க்கையும் சமுதாய அமைப்பும், பண்பாடும் நம்மிலிருந்துதான் தொடங்க வேண்டும். நம்மை நாமே பொதுமை அறத்தை நோக்கிப் புதுப்பித்துக் கொள்ளும் போது தான் நம் உள்ளத்திலும், நாட்டிலும், உலகத்திலும் புத்துயிர் விளையும்; புரட்சி ஏற்படும்.

சமூகம் வேரோடு புத்துயிர் பெறல்வேண்டும். அதற்கு நம்முள் உள்ள சிக்கல்களைத் தீர்க்கவேண்டும். உண்மையும் அன்பும் சிக்கலைத் தீர்க்கும் உந்தாற்றல்கள். அந்த ஆற்றலின் கருவியில் ஒன்று பாட்டு. 'பாட்டின் திறத்தாலே வையத்தைப் பாலிக்க' முடியும் என்று காட்டிய பாவேந்தர்

பாரதிதாசன் வழியில் புதிய ஓர் உலகுக்கு அழைப்பு விடுக்கும் குரலே இந்நூல்.

சொற்களின் ஒலியைப் பெருக்கிக் கொண்டிருக்கும் பாட்டு உண்மையை அறியாது, உணர்த்தாது என்பதால் தேவையற்ற உவமை உருவகங்களைப் பாடல்களில் காட்டவில்லை.

பாடல்களைத் தேர்ந்தெடுத்துத் தொகுப்பதிலும், செம்மைப் படுத்துவதிலும் துணை நின்ற அன்பர் ம. இலெ. தங்கப்பா, திரு ப. இராசேச்சுவரன், திரு ஞானம் பாடி முதலியோர்க்கு நன்றியுடையேன்.

மாந்தனுக்கு மாந்தன்
உடன் பிறந்தோன்-நட்பினன்
ஏந்திடும் தோழனும் ஆம்.

அன்பு,
த. கோவேந்தன்

## 1

பொதுவுடை மைக்கெனப்
பாடும் பாட்டே
புரட்சிப் பாட்டாகும்!
புதுவுடை மைகொளும்
பூரிக் கும்மொழி
புலவா பாடுகநீ!

மக்கள் குரலாய்க்
காலக் கனவாய்
மாறுவதே பாட்டு.
மக்கள் மாணபுற
மக்களுக் காகப்
பாடுவதே பாட்டு.

சீரிய கூரிய
தீஞ்சொல் லாலே
சிந்தனை மலரட்டும்.
வீரிய புதுமை
உலகுக் கெல்லாம்
விருந்தாய் விளையட்டும்.

தீமூட் டுகநீ
தீமூட் டுகநீ
புரட்சித் தீமூட்டு!
நாவின் மொழிகள்
தழல்எரி மலையாய்
நெஞ்சில் மோதட்டும்.

அறிவால் மக்கள்
திரண்டிட மாட்டார்
உணர்ச்சியின் தழல்வீசு!
குறிக்கோள் முறைகளைக்
கோள்செல் கணையாய்க்
குமுறிடப் பேசிடுவாய்.

இடிக்கும் வாயிலை
இடித்தெறி யாமல்
தலையினைக் குறைப்போமா?
அழிக்கும் முதலா
ளியத்தை அமிழ்த்த
நெருப்பா ருகிடுவோம்.



## 3

உலகின் மாந்தன்
யான்எனச் சொல்வாய்
யாரும்கேளி ராவதினுல்,
நலன்செய் நாடும்
நற்ருய் மொழியும்
அடுத்தே உனக்குச் சிறப்பாகும்.

நாடில் லாமல்
மொழியில் லாமல்
நானில மில்லை என்ருலும்,
நாடும் மொழியும்
உலகில் அடங்கும்
உலகின் மாந்த ஞகிவிடு.

உலகின் ஒவ்வொரு
முன்னேற் றத்திற்கும்
உயிருடலாக மாறிடுவோம்.
நலம்பெறும் நாடும்
நலம்பெறும் மொழியும்
நாக ரிகத்தில் மேம்படுவோம்.



## 4

ஏழ்மை சிதைத்து
வறுமை யகற்றி
இனபுற மாட்டோமா?
வாழ்க்கை என்பது
உள்ளார் இல்லார்
வலிமைப் போர்க்களமா?

உழைப்போர் பலபேர்
உண்பவன் ஒருவன்
உலகை மாற்றிடுவோம்.
பிழைப்பி துவா? சீ!
பிளவை அகற்று
பேடிமை வாழ்க்கைஇது.

தொழிலா ளர்களே!
பாட்டா ளிகளே!
தோளோடு தோள்இணைவீர்!
இழிவுடை உலகை
இன்றே மாற்றி
இன்புல காக்கிடலாம்!

புத்தம் புதியதாய்ப்
புலரும் புதுமையை
நோக்கிச் செல்லல் புரட்சியாம்.
வைத்த கொள்கையில்
வளைந்து வராமலே
வளர்ந்து செல்லல் புரட்சியாம்.

மன வளர்ச்சியில்
புது மலர்ச்சியில்
மலையின் ஊற்றென மாறுவோம்.
இன வளர்ச்சியில்
எண்ணப் புதுமைகள்
இடைவிடாச் செயல் புரட்சியாம்.

பழக்க வழக்கமாம்
பழமை இழப்பதால்
புதுமை யின்பலம் பெறுகிறோம்.
பழுத்தி னிக்கும்நல்
உண்மை அன்பினைப்
பாரில்காணல் புரட்சியாம்!



## 6

தோழா! தோழீ!
துணிவே துணையாகும்

உழைப்புப் பொருளை
உண்மை நலத்தை
உரத்தால் பெற்றிடுவாய்.

குழைவும் நெளிவும்
கோழைக் குரியவை
குமுறும் எரிமலை நீ.

அழைநின் உடன்பிறப்
பானவர் எல்லாம்
அகிலம் பொதுவாக்கு.

தழைக்கும் அன்பில்
உண்மைப் புனல்தந்
தறிவை விரிவாக்கு.

பிழைத்தோடும் துயர்
பிற்போக் கழிந்திடும்
பிணையும் பொதுவுடைமை!



# 7

நெருப்பில் புகுந்து
புதுவார்ப் புக்கெழும்
எஃகென விரைந்திடுவாய்.
கருத்தில் மாறாக்
கயவரின் நெஞ்சில்
கனலாய் நிறைந்திடுவாய்.

வரும்புது உலகின்
வரலா றெழுதும்
வன்மையைக் காட்டிடுவோம்.
திரும்பும் திசைதோறும்
மக்கள் தேவையின்
தீயாய் வளர்ந்திடுவோம்.

உருவா கும்பொது
வுடைமை உலகின்
உருவில் இணைந்திடுவோம்.
மருவும் தொழிலா
ளியமே வென்றிடும்
மனம்போல் மகிழாள்வோம்!

நாட்டுப் புறத்தார்
நகரத் தார்க்கென
நலன்கள் வெவ்வேறு?
நாட்டுடை மைஇந்த
நாட்டில் புகுந்தால்
நலன்கள் பொதுவாகும்.

கூட்டுடை மைக்குக்
கொள்கள ளைகத்
தோழா மாறிடுவோம்.
பட்டாளி யின்பொது
அரசே பாரில்
பாங்குற நின்றிடுமே.

வாட்டும் வறுமை
வளர்ப்பவர் தங்கள்
வாலை நறுக்கிவிடுவோம்
கோட்பா டனைத்தும்
மக்கள் நன்மையின்
குறியில் இருக்கட்டும்.

## 9

முதலாளி யம்எனும்
முதலைகள் உயிரை
முற்றத் தொலைத்திடுவோம்.
தொழிலாளி யம்எனும்
தோழமை வாழ்க்கை
தோளொடு தோளாகும்.

முதலாளி யம்எனும்
தன்னல வெறியின்
நெஞ்சினில் தீமூட்டு.
தொழிலாளி யம்எனும்
சரிநிகர் உலகம்
தொண்டால் தோன்றிவிடும்.

முதாளி யம்எனும்
முரண்கொள் பாம்பினை
மோதி மிதித்திடுவோம்.
தொழிலாளி யம்எனும்
பொதுமை 'அறம்மிகும்
சுவைக்கும் வாழ்வினியே.

 12

நாட்டுப் பற்றும்
உலகப் பற்றும்
நம்முடை உயிராகும்.
கேட்டைச் செய்வோர்
யாரா யினும்என்?
கிளர்ந்தெழல் நம்கடமை

பாட்டாளி கள்எலாம்
ஒன்றிய பாரினைக்
காத்தல் பண்பாகும்.
வேட்கை நமக்குப்
பொதுடை மைஅறம்
விரிவுல கெய்துதலே.

ஆட்சியிலே தொழி
லாளியம் ஒன்றின்
அனைவரும் உறவாவோம்.
மாட்சிக் குரியது
மாந்தனுக் கெல்லாம்
மாந்தனின் நன்மைக்கே.

பொதுமை அறம்கொள்
புரட்சியின் வீரன்
போரில் துணிவுடையான்.
எதுவும் இழக்கும்
ஈகம் மிக்கவன்
அஞ்சா எஃகுருவம்.

கொட்டிடும் செந்நீர்
தூக்கும் கொடியின்
கொள்கைக் குறியாகும்.
திக்குகள் எட்டில்
தேடினும் கிட்டா
வீரன் பொதுமையனே.

எதிரியை வீழ்த்திப்
பொதுமக் கள்நலம்
எய்திடல் அவன் போராம்.
புதுமணல் கொட்டப்
பழமணல் தள்வான்
புதுமைப் பொதுமையனே.



## 14

தொழிற் சாலைகளும்
நன்செய் புன்செயும்
நாட்டின் நுரையீரல்.
தொழிலா ளர்களும்
பாட்டா ளிகளும்
துடிப்புடை நெஞ்சாவார்.

அவரவர் திறமைக்
கேற்ப உழைப்போம்
அனைவரும் பகிர்ந்துண்போம்.
அவரவர் தேவைக்கு
ஊதியம் பெறுவோம்
அனைவரும் நலம்பெறுவோம்.

உழையார்க் கிங்கே
உணவிலை என்னும்
உண்மை உணர்த்திடுவோம்.
உழைப்பா ளிகளெலாம்
ஒன்றும் உலகை
ஒருமனை யாக்கிடுவோம்.

உடலை வருத்தி
உயிரைக் கொடுத்தே
உழைக்கும் தோழர்களே!
அடடே வாழ்க்கை
உண்மைப் பொருளை
அடைந்திட மாட்டோமா?

வாழ்க்கை என்பது
வறுமைச் சுமையாய்த்
துயராய் நமக்குளதே,
வாழ்க்கை என்றால்
சிககல், கசப்பு
வருத்தம் இவைதாமே?

புண்பட் டோம்நாம்
புரைபட் டோம்நாம்
பொறுத்தது போதுமடா.
விண்தொட் டெழும் பல்
புள்ளென எழுவோம்
வெற்றியின் தடைமாய்ப்போம்..

ஒவ்வொரு மாந்தன்
உயர்வுக் காக
அனைவரும் ஒன்றுவோம்.
ஒவ்வொரு வருமே
ஒன்று கிடுவோம்
அனைவரின் உயர்வுக்கே.

ஒவ்வொரு பொருளும்
ஒவ்வொரு சிறப்பும்
ஒன்றிய நம்உழைப்பே.
ஒவ்வொரு வீடும்
ஒவ்வோர் ஊரும்
உயர்ந்ததும் நம்மாலே.

உழைப்பை அளித்தே
உலகைப் படைத்தோம்
உணவினைப் பெற்றோமா?
உழைப்புக் கேற்ற
ஊதியம் கொள்வோம்
தேவையை நாம் பெறுவோம்.



## 17

மொழியின் பகையும்
முதலா ளியமும்
நமக்கிரு பகைகளடா.
தொழிலா ளியத்தின்
தோழமை யாலே
பகைத்தோல் உரித்திடுவோம்.

மொழியை அழித்துக்
கலையைச் சிதைத்தல்
முதலா ளியமாகும்.
விழியை இழந்து
விலாவை இழந்து
வாழ்வதும் வாழ்வாமோ?

முதலா ளியத்தை
அழித்தால் அல்லது
மொழியும் வாழாது.
முதலா ளியத்தை
முரித்தால் அல்லது
வாழ்க்கையும் சிறக்காதே.



## 18

வாழ்க்கைக் கழனி
வளமுறக் களைகள்
களைந்தால் போதாதே,
வாழ்க்கைக் கழனியை
அடிமுடி யாக
உழுதே தள்ளிடுவோம்.

புதிய விதையைப்
பெற்றிட வேண்டிப்
பழவிதை சாதல்முறை,
முதலா ளியத்தை
மோதி யழித்தால்
தொழிலா ளியம்வெல்லும்.

ஏற்றம் இறக்கம்
தட்டிச் சமநிலை
எய்திடல் நம்வேலை.
மாற்றம் என்பது
பொருளா தார
மடுவினைத் தூர்ப்பதுவே.

நெஞ்சந் தனிலே
புண்கள் குருதியை
நிறுத்தா தூற்றுகையில்,
விஞ்சும் எந்தத்
துயரும் எரிமலை
வெறியினைக் கொட்டாதா?

வாழ்வைச் சுவைக்கும்
வழியைத் தடுக்கும்
வல்லரண் யாவையுமே,
போழ்ந்து பொசுக்கிப்
புரட்சிமுன் நிறுத்திப்
புதுக்குவோம் உலகத்தை.

உலகம் நமக்கு
நமக்கே உலகம்
உரிமைகள் பெற்றிடுவோம்.
மலைநிகர் பகையும்
மண்ணுக் கிடுவோம்
வாழ்வைச் சுவைத்திடுவோம்.

விழியை வருத்தும்
தொலேவும், துயரமும்
உடையது போராட்டம்.
தொழிலா ளியத்தை
வென்றிடச் செய்யும்
துணிவில் துணைநிற்போம்.

முதலா ளியமும்
முரண்படு மதமும்
சிந்தும் குருதியெலாம்
கொதிப்புற் றெழும்நம்
கண்ணீர்க் கடலில்
குரலற் றமிழட்டும்.

உலகில் உள்ள
தொழிலாளிகளே!
ஒன்ருய்க் கூடிடுவீர்.
உலகே வீடாய்
ஒன்றே உறவாய்ப்
பொதுமையில் ஒன்றிடுவோம்.

மாந்தனை மாந்தன்
விழுங்க நினைத்தால்
விலங்கென மாய்த்திடுவோம்.
மாந்தன் ஏற்றம்
தடுக்கும் முட்டுக்
கட்டையை எடுத்தெறிவோம்.

வாழ்வைச் சுவைக்கும்
வகையை அளிக்கும்
பொதுவுடை மைக்கிடையில்,
சூழ்ச்சிகள் செய்யும்
தீயவர் தம்மைத்
தூள்தூள் ஆக்கிடுவோம்.

உழைப்பா ளிகளின்
குருதியி லிருந்தே
உண்மை பிறக்குமடா.
தழைக்கும் உரிமை
தலையை நிமிர்த்தும்
தன்மானம் கொள்வமடா.



## 22

இறப்பே இறப்பை
வெல்லும் ஆற்றல்
உடையது இயற்கையறம்.
பிறந்த நம்மகள்
இனபம் பெற்றிட
இறப்பில்முன் நிற்போம்.

சிலர்செத் தால்தான்
பலர்வாழ்ந் திடலாம்
செந்நீர் பாய்ச்சிடுவோம்.
நலம்பாடு எய்திட
நமது புரட்சியில்
சாவோம், பகைசாய்ப்போம்.

புத்துல கொன்றைப்
புதுவாழ் வறத்தைப்
பொதுவுடை மைஉலகை,
செத்துக கொடுககும்
ஈகையி ஞலே
சீருறச் செய்திடுவோம்.



## 23

உலகைக் கலக்கும்
ஒருபெரும் புரட்சி
உண்டாக் கிடுவோம்நாம்!
சிலிர்ப்புற் றெழும்ஒரு
முள்ளம் பன்றியாய்ச்
சீறுக நம்எண்ணம்.

உதைக்கும் உதையில்
உலகின் உண்ணிகள்
உறவற்று அழியட்டும்
புதையட் டும்போய்ப்
புரட்சித் தீயில்
பொய்புரட் டிலக்கியமே.

உலுக்கும் உலுக்கில்
முதலா ளியப்பேய்
உயிர்கள் முடியட்டும்.
வலுமிக் குடையோம்
தொழிலா ளியத்தால்
உலகை வளஞ்செய்வோம்.

ஒட்டிய வயிறு
கொட்டும் கண்ணீர்
உயிரொடு போராட்டம்,
கட்டத் துணியும்
வாழும் இடமும்
காணுதவர் கோடி.

இவர்களைப் பற்றி
எண்ணு தந்தோ
எங்கோ உள்ளதுவாம்
'சுவர்க்கம்' 'கடவுள்'
'தொழுவீர்' என்னும்
சுரண்டல் கூட்டங்கள்.

மாந்தர் என்னும்
மாண்பு மக்குண்டா,
மனமும் இருக்கிறதா?
தாழ்ந்திடும் மக்களை
வாழ வைக்காத
வாழ்வும் ஒருவாழ்வா?



## 25

ஏழையர் வாழ்வில்
இன்பம் என்னும்
வாய்ப்பே கிடையாது.
ஏழைக கிங்கே
இடராய் உள்ளவை
இறைவனும் சட்டமுமே.

மதமும் சாதியும்
நீதி மனறமும்
ஏழையை மதிபபதிலை,
முதலா ளியததின்
முகவர்க ளாக
முனனே அவைநிற்கும்.

புரட்சி என்னும்
எரிமலை பொங்கிப்
புத்துல கொன்றுவரத்
துறக்கப் பட்டஎன்
ஏழைத் தோழரே
தொடர்வோம் போராட்டம்.

பாட்டா ளியர்தம்
படையின் அணியில்
பதைப்புடன் நின்றிடுவோம்.
வாட்டும் துன்பம்
வறுமை வாழ்வை
வென்று மகிழ்ந்திடுவோம்.

எண்ணித் துணிந்தோம்
இடறில் வீழோம்
வெற்றியை எய்திடுவோம்.
மண்ணில் பகைவர்
பூண்டி ல்லாமல்
மண்டைப் புழுமாய்ப்போம்.

முதலா ளியத்தால்
முடைநாற் றம்கொள்
முரண்உடை வாழ்விற்கும்,
புதுவாழ் வமைக்கும்
பொதுவு டைமைக்குப்
போரினை ஆக்கிடுவோம்.



## 27

இன்னல்கள் இன்றி
வெற்றி என்பதை
எண்ணிட முடியாதே,
இன்னல்கள் யாவும்
நாம்ஏற் றவையே
எதிரியை வளர்த்தனவே.

நரிமனத் தாரை
ஆட்சியில் வைத்தோம்
மிஞ்சின சிறகுகளே!
எரிமலை யாக
வெறிப்புலி யாக
எதிரியைச் சாடிடுவோம்.

உரிமை விடுதலை
உலகின் ஒற்றுமை
ஒப்புர வறங்காண்போம்.
சரிநிகர் உடைமை
தழைக்கும் வரையில்
தளரோம் போரிடுவோம்.

## 28

உண்மையும் அன்பும்
பாட்டா ளிகள்தம்
உயிரும் உடலாகும்.
திண்மையில் எ∴காய்த
தெளிவில நீராய்த்
திகழ்பவர் உழைபபியலார்.

பணக்கா ரர்தம்
பகடை களாகுமோ
பாட்டா ளிகள்? அலலர்.
பிணக்கொன றில்லா
ஒற்றுமைப பினனல்
பெற்றவர் தொழிலாளர்.

விழிப்புணர் வுற்ற
தொழிலா ளியத்தை
வீழ்த்திட முடியாது.
மொழிக்குயிர் ஈந்த
கொடைமடம் போல
வாழ்வுக்கு வாழ்வளிப்போம்.